[19th August 1960

விதமான சாமான்களும் வந்து சேரவில்லை. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் இதில் கவனம் செலுத்தி சாமான்களை தருவிப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்வார்களா?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** கேட்கப்பட்டிருக்கும் கேள்வி கட்டில்களைப் பற்றியது. இப்போது ஏதோ பக்கத்திலிருந்து கடன் வாங்கி உபயோகப்படுத்துகிறோம். புதிதாக கட்டில்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறோம். அவைகள் வந்தவுடன் கொடுக்கலாம்.

**Mr. SPEAKER:** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் இப்போது சபையில் இல்லை. இன்னும் சிறிது நேரத்தில் வந்து விடுவார்கள். வந்தவுடன் 284-வது கேள்வியை எடுத்துக் கொள்ளலாம்.

*Medico-herbal gardens*

*285 *Q.*—**Sri P. G. MANICKAM:**
**Sri S. M. ANNAMALAI:** } கனம் ரெவின்யு அமைச்சர்
**Sri M. P. SARATHI:**
அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னை ராஜ்யத்திலே எந்தெந்த இடங்களிலே பற்பல விதமான நோய்களைத் தீர்ப்பதற்கான மூலிகைகள் உற்பத்தி செய்யக்கூடிய தோட்டங்கள் இருக்கின்றன?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** Medicinal plants are cultivated in the Medicinal Farm at Arumbakkam attached to the Hospital of Integrated Medicine, Madras, and in the Government Cinchona Plantations in the Anamalais and in the Nilgiris.

**Sri P. G. MANICKAM:** ஸார், மூலிகைகளை அதிகமாக உற்பத்தி செய்யும் திட்டங்களை கிராமப் பஞ்சாயத்துக்களின் நேரடிப் பார்வையின் கீழ் கொடுக்கலாம் என்பதைப்பற்றி திட்டக்கமிஷன் ஆராய்ச்சி செய்ததைப்பற்றி சென்னை சர்க்காருக்கு ஏதாவது விவரம் தெரிவிக்கப்பட்டிருக்கிறதா? அப்படியானால் அதன் பேரில் சர்க்கார் எடுத்துள்ள நடவடிக்கைகள் என்ன?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** இதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. இப்போது இரண்டு மூன்று இடங்களில் இந்த மூலிகை ஆராய்ச்சி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்கள் எல்லாம் ஏற்பட்ட பின்னால் இவைகளைப் பஞ்சாயத்திடம் ஒப்படைப்பதைப்பற்றி ஆலோசனை செய்யலாம்.

**Sri T. T. DANIEL:** May, I know whether any research is being conducted on an all-State basis to find out the presence of valuable medicinal plants in various areas?

19th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : Not any intensive research; but in a way in the places mentioned they are experimenting about the use of these plants—some of the known plants.

SRI V. SUBBIAH : நம் ராஜ்யத்தில் பொதிகை மலைச் சாரலில் இருக்கின்ற குற்றாலத்தில் எல்லாவித மூலிகைகளும் கிடைக்கின்றன. அந்த இடத்திலேயே நம் ராஜ்யம் பூராவுக்கும் தேவையான மூலிகைகளை உற்பத்தி செய்வதற்கு ஏதாவது திட்டமிருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : உள்நாட்டு வைத்திய முறை, அவைகளுக்குத் தேவைப்படும் மூலிகை இவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து புனருத்தாரணம் செய்வதற்கென்று ஒரு குழு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அவர்கள் இவைகளின் மீது என்ன ஆலோசனை சொல்லுகிறார்களோ, அதன்படி கவனிக்கலாம்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த ஆராய்ச்சி செய்கின்ற குழுவானது மாகாணம் பூராவிலும் சர்வே செய்து பார்த்து, காட்டிலாகாவின் மூலமாகவும் வேறு பல மலைப் பிரதேசங்களிலும் கிடைப்பதையெல்லாம் பார்த்து, அதன் மூலம் மேலும் மேலும் மூலிகைகளை உற்பத்தி செய்வதற்குச் சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொது என்னவெல்லாம் மூலிகைகள் இருக்கின்றன, அவைகள் எங்கெல்லாம் கிடைக்கின்றன என்பதைப்பற்றி இப்போதுள்ள மனிதர்கள் போனால் ஆராய்ந்து பார்க்க முடியாது. ஏட்டுச்சுவடிகளில்தான் எல்லாம் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை எல்லாம் படித்துப்பார்த்துத் தான் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது நம் நாட்டில் உற்பத்தி செய்யக்கூடிய மூலிகைகள் வெளிநாட்டுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : உள்நாட்டிலும் பல இடங்களுக்கும் உபயோகப்படுகிறது. வெளிநாட்டுக்கும் சில மூலிகைகள் ஏற்றுமதியாகின்றன. "ஸெர்பென்டினா" என்கிற மூலிகை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

SRI K. VINAYAKAM : What are the various kinds of herbs that are grown in that field in Arumbakkam? What is the expenditure incurred for growing them? May I know the value realised out of these herbs?

MR. SPEAKER : I think the hon. Member must pay a visit to Arumbakkam. (Laughter.)

THE HON. SRI M. A. MANICKAVELU : The question is too long for me to give all the necessary details now.